*ஸ்ரீ:*

*ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஸிகாய நம:*



# ஸ்ரீதூப்புல் தேஸிகன் பேரருளாளனை மங்களாஸாஸனம் பண்ணும் மஹோத்ஸவம்

*[ஸ்ரீ உ.வே. வித்வான். ப்ரஹ்மதேசம் தூப்புல். நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி]*

''காசி முதலாய நன்னகரியெல்லாம்கார்மேனி அருளாளர் கச்சிக்குஒவ்வா'' என்கிறபடி ஸ்ரீபேரருளாளன் கோவில் கொண்டிருக்கும் கச்சிப்பதிக்கு ஒரு தனிப்பெருமையுண்டு. அருளாளனும், அருள்மிகுந்ததொரு வடிவான பொய்கையாழ்வாரும், அருள் தரும் ஆரணதேசிகனும், இக்கச்சியில் திருவவதரித்ததைப் பற்றி இந்நகருக்கு இத்தனிப்பெருமை வந்ததென்று-சொல்லலாம். அருளைப்பரிபூர்ணமாகவுடையவனும், அந்த அருளை நமக்கெல்லாம் வாரிவழங்குபவரும், ஓரிடத்தில் சேர்ந்தால்அவ்விடம் பரமபதம் எனக்குறையில்லையிறே.

தூப்புல் நிகமாந்தமஹாதேசிகன் கச்சியில் தூப்புல் எனும் அக்ரஹாரத்தில் திருவவதரித்தார். அவர் திருவவதரித்த நன்னாளாகிய புரட்டாசித்திருவோணத்-தன்று ஸ்ரீபேரருளாளனை மங்களாசாஸனம் பண்ண எழுந்தருளுவது வழக்கம். கச்சியில் அநேக மஹோத்ஸவங்கள் பேரருளாளனுக்கு நடக்கிறது. எனினும் ஆசார்யச்ரேஷ்டர் ஆன தூப்புல் தேசிகனும், பேரருளாளனும் சேர்ந்து அதுவும் ஸ்ரீதேசிகன் திருவவதார தினத்தன்று ஸேவிக்கப்பெறுவது இந்த மஹோத்ஸ-வத்திலாகையால்ஸ்ரீவைஷ்ணவர் திரள்திரளாகச் சேருவார்கள்.

ஸ்ரீதேசிகனுக்குத்திருவவதாரதினத்திற்கு முன்னே ஒன்பது நாள்கள் உத்ஸவம் க்ரமமாக நடக்கும். ஒன்பதாவது திருநாளன்றே காஞ்சியில் ஒரு பரபரப்பு ஏற்படும். ஏன்காஞ்சியில்? சுற்றுப்புறத்தில் உள்ள க்ராமங்களிலும் நகரங்களிலும் ஒருஸம்ப்ரமம் ஏற்படும். எல்லோரும் கச்சிநகருக்குத் தங்க-ளுடைய பந்துமித்ரவர்கங்களுடன் வந்துசேர்ந்துகொண்டிருப்பார்கள். காஞ்சி-யில் நிரந்தரவாஸம் பண்ண வாழப்பிறந்தவர்களுக்கு இதொரு விசேஷமாக அவரவர்கள் பந்துக்களோடும் ஸ்நேஹிதர்களோடும் கூடி மாலையும், மாலுகந்த-வாசிரியனையும்சேர்த்துஅனுபவிக்கப்போகிற நாள் இதுவன்றோ.

சாற்றுமுறை தினத்திற்கு முன் நாள் இரவே அதிர்வேட்டுகளின் பேரொலி வானைப்பிளக்கும். வெகுதூரத்தில் உள்ளவர்களையும் ஆசார்யோத்தமனின்

திருவவதாரமஹோத்ஸவத்தில் கலந்துகொள்ளுமாறு அழைக்கிறதோ இந்தச்சப்தம் அல்லதுமறந்திருப்போரை ஞாபகப்படுத்துகிறதோ இந்தச் சப்தம் என்று சொல்லலாம். முன்நாள் இரவு அதிர்வேட்டு ஸந்நிதியில் கேட்டால் ''என்ன நாளைக்கு? வேட்டுகேட்கிறதே!'' என்பதுதான் முதல் கேள்வி.

திருவவதார தினத்தன்று பின்மாலை 4 மணிக்கு ஸ்ரீஸ்வாமி தேசிகன் கோவில் கொண்டிருக்கும் ஸந்நிதியில் இருந்து அதற்கு அடுத்துள்ள, ஸ்ரீஸ்வாமி விபவத்தில் எழுந்தருளியிருந்த திருமாளிகை என வழங்கப்பெறும் ஸ்தலத்திற்கு ஏள்ளியாகும். அங்கு தற்காலம் திருமாளிகையாக எதுவும் இல்லாவிடினும் 'ஜடா ப்ரம்மசாரி' எனும் ஸ்வாமியின் அரிய தொண்டால் நிர்மாணமாகிய ஓர் மண்டபத்தில் ஸ்வாமி தேசிகன் வீற்றிருப்பார். அப்போது திருமேனியில் உள்ள திருவாபரணங்கள் எல்லாம்களையப்பட்டு மஞ்சனமாடு-வதற்கு யோக்யமாக வெறும் திருமேனியோடு ஸேவை ஸாதிக்கும் க்ரமம். எம்பெருமான் ஜீவகோடிகளை வசீகரிக்க உபயோகிக்கும்வழிகளில் கலன்கள் அணியாது வெறும் திருமேனியின் வடிவழகைப் பரிபூர்ணமாகக் காட்டி வசீகரிப்பது ஒரு வழி.ஹனுமானை இப்படி வசீகரித்தான் சக்ரவர்த்தித்திருமகன். அதுபோல் அங்கே கூடியிருக்கும் வைஷ்ணவர்களை வசீகரிக்கத் திருமேனி-யில் ஒருவிதமான அலங்காரங்களும் இல்லாமல் வெறும் திருமேனியின் சோபையைக்காட்டி வசீகரிக்கத் திருவுள்ளம் பற்றினார்போலும் நம் ஆசார்ய-ச்ரேஷ்டர். திருவவதார ஸ்தலத்தில் கோவில் கொண்டிருக்கும் ஸ்ரீஸ்வாமி தேசிகனின்திவ்யமங்கள விக்ரஹமானது ரொம்பவும் விலக்ஷணமாய் உள்ளது. விபவத்தில்ஏள்ளியிருக்கும்படியோ என்று எல்லோரும் ஸந்தேஹிக்கும்-படியாய் இருக்கும். தூமுறுவல் கொண்ட முகமும் வ்யாக்யா முத்திரைக்-கையும், முப்புரிநூலும் தன் நெஞ்சத்தைக் கோவிலாகக்கொண்ட பேரருளாளன் திருமார்பில் துலங்க, ஸேவை ஸாதிக்கும் திருமேனியை ஸேவிக்க ஆராவமு-தமாக இருக்கும் அடியார்களுக்கு.

ஸ்ரீஸ்வாமிக்குத் திருமஞ்சனம் நடைபெற்றதும் ஸ்ரீஸ்வாமி சிறியதொரு தங்கக் கைத்தலத்தில் ஸர்வ அலங்காரங்களுடன் வீற்றிருப்பர். திருவரையில் உயர்ந்த பட்டுக்கரையில் அமைந்த பஞ்சகச்சவேஷ்டியும், திருமுடியும் உயர்ந்ததோர் தொப்பாஹாரம் எனப்படும் கொண்டையும் புஷ்பமாலைகளு-டனும் ஸேவைஸாதிப்பர் ஸ்ரீஸ்வாமி. அப்போது ஸ்ரீஸ்வாமி அஞ்சலிஹஸ்த-ராக ஏள்ளியிருப்பர். அகாரவாச்யன் ஆன எம்பெருமானை நீராய் உருக்கு-வதற்காக இந்த அஞ்சலியாகிற ப்ரத்யஸ்த்ரத்தை ஸ்ரீஸ்வாமி வஹித்தார்போலும். அல்லது இந்த அஞ்சலியே உபாயமாக மாறிப்பரமாத்மாவை வசீகரிக்கும் எனத் தம் அடியார்களுக்கும் தாம் அநுஷ்டித்துக்காட்டுகிறார் போலும். அல்லது இந்த

அஞ்சலி எம்பெருமானுக்கு ஒரு பெரிய பளுவாக மாறி இந்த அஞ்சலியை வஹித்தவன் விஷயத்தில் அவன் தமது அனைத்தையும் வழங்குவன் என்பதை ப்ரத்யக்ஷமாக்க இதை வஹித்தார்போலும்.

சரியாக ஆறு மணிக்கெல்லாம் புறப்பாட்டுக்கு அறிகுறியாகத் திருச்சின்-னம்பரிமாறுவார்கள். அடியார்கள் எல்லாரும் ஒன்றாய்ச்சேர்ந்து ''கவிதார்கிக-ஸிம்ஹா'' என்றும், ''வேதாந்தகுரோ'' என்றும், ''ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரா'' என்றும் இப்படிப் பல பிருதங்களையும் அநுஸந்தானம் பண்ணிக்கொண்டு பின்தொடர, மேள வாத்தியங்கள் ஒலிக்க, ஹயக்ரீவனை மங்களாசாஸனம் செய்து, பின் அருகே வேகவதீஸமீபத்தில் திருத்தண்கா என்கிற திவ்யதேசத்தில் திருமகள் மண்மகள் இவர்களால் நித்யமாய் ஸேவிக்கப்படுமவராயும், அவ்யாஜமான ஒரு க்ருபையினால் பரிபூர்ணராயும், வேதாந்தங்களாலேயே அறியக்கூடியவராயும், அத்விதீயராயும் உள்ள விளக்கொளி எம்பெருமான் கோவிலுள் ஏள்ளுவர். பிறகு ப்ரதக்ஷிணத்தில் ஏள்ளியிருக்கும்கோதையையும் மரகதவல்லித்தாயாரையும், கருத்மானையும் மங்களாசாஸனம் செய்துகொண்டு பெருமாளைத் திருவடிதொழ உள்ளே ஏள்ளுவர்.அங்கேபக்தகோடிகள் ஸ்ரீஸ்வாமியால் திருத்தண்கா எம்பெருமான் விஷயமாக அருளப்பட்ட ''சரணாகதி தீபிகை'' எனும் ஸ்தோத்ரத்தை அநுஸந்திப்பர்கள்.

ஸ்ரீஸ்வாமி திருவவதரித்த ஸ்தலத்தில் கோவில் கொண்டிருக்கும் எம்பெருமான் விஷயமாகையால் அந்த அபிமானம் தோற்ற வெகு அழகாயும் ஸகல சாஸ்த்ர அர்த்தங்களையும் பொதிந்துகொண்டுள்ளதாயும் இருக்கும் இந்த ஸ்தோத்ரம். திருத்தண்கா எம்பெருமான் ஆபிரூப்யத்தில் ஈடுபட்டு ஒருநாளும் த்ருப்தி அடையாதவராய், அவனிடத்து ஆராத காதல் பூண்டு, அவனையே வரித்து, அப்படியே தம் ஆசார்யர்களால் அவனிடம் ஸமர்ப்பிக்கப்பட்டதை அழகாக இதில் நிரூபிக்கிறார். எம்பெருமான் மடியைப் பிடித்து இழுத்து ரக்ஷிக்க-வேண்டியது அவன் கடமை என்றும் அப்படி ரக்ஷிக்காவிடில் அஸாதாரணமாய் உள்ள தயாதி பிருதங்கள் தன்னோடே கூட திரும்பவந்துவிடும் என அறுதியிடுகிறார். தன்னை ரக்ஷித்ததற்குப் பலமாகப் பெரிய பிராட்டியாரின் கடைக்கண்களின் கடாக்ஷத்தை அடையும்படி ப்ரார்த்திக்கிறார்.அங்கே கூடியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்த இடங்களை அனுஸந்தானம் பண்ணும்-போது தங்களையும் அறியாது ஆனந்தத்தில் மூழ்கியிருப்பார்கள். பிறகு தீபப்ரகாசனிடம் இருந்து மர்யாதைகளெல்லாம் க்ரமமாக நடைபெறும். கோஷ்டிக்குத் தீர்த்தப்ரஸாதங்கள் ஆனவுடன் அருகில் ஏள்ளியிருக்கும் ஆழ்வார்களை மங்களாசாஸனம் செய்துவிட்டு ப்ரதக்ஷிணமாக ஏள்ளித் தன் ஸந்நிதிக்கு எழுந்தருளுவர்.இப்படி தீபப்ரகாசனின் மங்களாசாஸனம் முடிவு பெற ஒன்பது மணி ஆகிவிடும்.

இனி பேரருளாளன் மங்களாசாஸனத்திற்காக வேண்டிய ஏற்பாடுகள் நடைபெறும். ஒவ்வொரு ஏற்பாடுகளும் வெகு அழகாய் அமைந்துள்ளது. அத்தியூரானைமங்களாசாஸனம் செய்யத் திருப்பல்லக்கில் ஸ்ரீஸ்வாமி தேசிகன் எழுந்தருளுவார்.இந்தத் தங்கப்பல்லக்கு பேரருளாளன் ஸந்நிதியில் இருந்து அருளாளனால்ஸ்ரீஸ்வாமியை ஏறியருளப்பண்ணிக்கொண்டு வருவதற்காக அனுப்பப்பட்டது. இந்தப் பல்லக்கு அமைந்துள்ள விசேஷத்தை என்னவென்று சொல்வது.பேரருளாளன்ஸந்நிதியில் இரண்டு தங்கப்பல்லக்குகள் உள்ளன.ஒன்று ப்ரஹ்மோத்ஸவத்தின் ஐந்தாம் நாள் கண்டருளும் நாச்சியார் திருக்கோலத்துக்காக உபயோகப்படுமது.

மற்றொன்று எம்பெருமானும் உபயநாச்சிமார்களும் ஒன்றாக ஏள்ளும் உத்ஸவங்களாகிய தோட்டஉத்ஸவம் என்ன, விடையாற்றி மூன்றாம் நாள் உத்ஸவம் என்ன, இவைகளுக்கு உபயோகப்படுமது. திவ்யதம்பதிகளின் தத்வத்தை ''தம்பதி தயா திவ்யாபகா வ்யாபகா'' என்றும் ''சேஷி தம்பதி'' என்றும், ''சேஷி தம்பதி தயா'' என்றும், ''யுவாம் தம்பதீ தைவதம் ந:'' என்றும் இப்படிப்பலபடியாக லோகத்திற்கு எடுத்துக்காட்டிய மஹானைத் தம்முடைய ஸந்நிதிக்கு எழுந்தருளப்பண்ண, தாமும் தம் நாச்சிமார்களும் ஆரோஹ-ணிக்கும் திருப்பல்லக்கையன்றோ பேரருளாளன்அனுப்புகிறான். அப்படிப்-பட்ட பல்லக்கில் ஸ்ரீஸ்வாமி தேசிகன் ஏள்ளியானதும்திருச்சின்னம் புறப்பாட்-டிற்கு அறிகுறியாகப் பரிமாறப்படும். அதிர்வேட்டுகள்சப்திக்கும்.மேள வாத்யங்கள் முழங்கும்.உடனே புறப்பாடு ஆகும்.இதற்குள் மணி ஏறக்குறைய 9.30 ஆகிவிடும். முன்னே இருபுறங்களிலும் குடைகள் வரிசையாகச் செல்லும். நடுவில் மேள வாத்யங்களும் பின்னே வேதபாராயண கோஷ்டியுடனும் அடியார்கள் புடைசூழ வெகு கம்பீரமாக உயர்ந்த பல்லக்கில் ஸ்ரீஸ்வாமி ஏள்ளியாகும். வழியில் கோவில் கொண்டிருக்கும் திருவெஃகா எம்பெரு-மானை ப்ரதக்ஷிணமாக ஏள்ளுவர். தாம் மனோரதிக்கும் பலத்திற்கு உபாய-மாகவன்றோ யதோக்தகாரி எம்பெருமானை மங்களாசாஸனம் செய்தபடி. ஆகையால் அவரையும் ப்ரதக்ஷிணம் பண்ணிக்கொண்டு ஸந்நிதிவீதிக்குச் சுமார் 10.30 மணிக்கு எழுந்தருளுவர். அங்கங்கே குடியிருப்போரும், வெளியூரில் இருந்து வந்திருப்போரும் இதற்குள் இந்தக்கூட்டத்தில் கலந்துகொள்வர். ஸந்நிதிவீதியில் ஒரு பெரும் ஸ்ரீவைஷ்ணவக்கூட்டம் திரண்டிடும். இங்குப் பேரருளாளனுடைய கருடோத்ஸவக்குடைகள் மற்ற குடைகளின் வரிசைகளுடன் சேர்ந்து அந்த வரிசையை நிறம்பெறச்செய்யும். பெருமாளுடையவாத்யகோஷ்டிகளும், ஏற்கனவே வந்துகொண்டிருக்கும் வாத்யகோஷ்டிகளுடன் சேர்ந்து விழா ஒலியைப் பேரொலியாக்கும்.

ஸந்நிதிவீதியின் ஆரம்பத்தில் இரண்டு அதிர்வேட்டுக்கள் விழுந்தவுடன் அருளாளன் சுற்றுப்புற வீதிகளில் உள்ளோர்எல்லோரும் தங்கள் கார்யங்களை ஒருவாறு முடித்துக்கொண்டோ அல்லது அப்படியே விட்டுவிட்டோ ஓடிவந்து ஸ்ரீதேசிகனின் அடியார்கள் குழாங்களில் கலந்துகொள்வார்கள். ஸந்நிதி-வீதியும், அவ்வீதியிலுள்ள க்ருஹங்களும்கோலங்களாலும், பச்சைமாவிலைத் தோரணங்களாலுமலங்கரிக்கப்பட்டு ஸ்ரீஸ்வாமிக்கு நல்வரவேற்பு அளிப்ப-வைபோல் தோன்றும். ஒவ்வொரு க்ருஹங்களிலும் பூர்ணகும்பங்களும், ஜ்வலிக்கும் குத்துவிளக்குகளும் வைக்கப்பட்டிருக்கும். முன்னே இயல்கோஷ்-டியுடனும், பின்னே காஞ்சிக்கு அஸாதாரணமாயுள்ளதும் அதற்குள்கொஞ்சம் கொஞ்சமாக வ்ருத்தியாகிக்கொண்டு வருகிறதாயுமுள்ள வேதபாராயண-கோஷ்டியுடனும், அடியார்கள் கைகூப்பியவாறே பின்தொடர, ஸகலபரிவாரங்-களுடன் நேராகக் கோவிலுக்குள் புகுவர். கோபுரவாசலில் புகுந்ததும் அருளாளனால் அனுப்பப்பட்ட அர்ச்சக பரிசாரகர்கள் ஸ்வாமியை எதிர்-கொண்டுவரவேற்றுப் பின்தொடர்வர். பிறகு இரு கோஷ்டிகளும் முடிவ-டையும். அங்கிருந்து நேராக வாஹன மண்டபத்திற்கு எழுந்தருளி அங்குக் கோவில் கொண்டிருக்கும் ஸ்ரீதாததேசிகனுக்கு மர்யாதைகளை வழங்கிப் பிறகு மண்டபத்தில் எழுந்தருளுவர்.இதற்கு மணி ஏறக்குறைய பன்னிரண்டு ஆகிவிடும்.

பிறகு பல்லக்கில் இருந்து சிறு தங்கக் கைத்தலத்தில் ஏள்ளியிருப்பர் ஸ்ரீஸ்வாமி. திருச்சின்னம் பரிமாறவும் திருத்திரை நீக்கப்படும். அதிர்வேட்டு சப்திக்கும். பேரருளாளன் மங்களாசாஸனத்திற்காக ஸ்ரீஸ்வாமி புறப்பட்டாகி-விட்டது என்பதைத் தெரிவிக்கும். மஹான்களாயும்ஆசார்யபதம் செலுத்து-பவர்களாயுமுள்ளஸ்வாமிகள் முன்னே கோஷ்டியை அலங்கரித்துக்கொண்டு ஏள்ளுவர்கள்.ஸ்தோத்ரபாடம்தொடங்கப்படும். ஸ்ரீஸ்வாமி த்வஜஸ்தம்பத்தை ப்ரதக்ஷிணமாகவந்துதொண்டரடிப்பொடி வாசலண்டை நிற்பர். அப்போது ஸ்வாமி ஏள்ளியிருக்கும் இருப்பை ஸேவித்து அடியார்கள் பலவிதமாக அனுபவிப்பார்கள். ஸ்ரீஸ்வாமியின் திருமுகமண்டலத்தில் ஓர் தனியான புன்முறுவல் தாண்டவமாடும் அப்போது.''பேரருளாளனை மங்களாசாஸனம் பண்ணப்போகிறோம் என்று, என்ன குதூஹலம் ஸ்வாமிக்கு!'' என ஒரு ரஸிகர் அனுபவிப்பர். ஸ்ரீஸ்வாமி கம்பீரமாக ஒரு வாரணம் நடப்பதுபோல் அசைந்து அசைந்து ஏள்ளுவதை ஸேவித்து, ஆரணநூல்வழிச்செவ்வை அழித்திடும் ஐதுகர்களின் வாதக்கதலிகளை மாய்க்க ஓர் வாரணம்தான் பையநடக்கிறதோ என்று தோன்றும். ''ஸ்ரீஸ்வாமியின் திருவடிஸம்பந்தம் பெற்றோம்; ஒருகாலும் அல்வழக்கினில் இனிப்படியோம்; நமக்கு ஆர் நிகர் நானிலத்து?'' என்று

ஸ்ரீஸ்வாமியின் திருவடிஸம்பந்தம் பெற்றவர்கள் பெருமையாகப் பேசிக்கொள்-வர்கள். ஒருவர் ஸ்ரீஸ்வாமியின் ஆபிரூப்யத்திலும் காம்பீர்யத்திலும் ஈடுபட்டு அப்படியே தம் ஹ்ருதயத்துள் தூப்புல்புனிதரை நிறுத்துவர். உடனே நம்மன் போலே வீழ்த்தமுக்கும் நாட்டில் உள்ள பாவம் எல்லாம் தம்மை விட்டு ஓடிய-படியைக்கண்டு ஆச்சர்யப்பட்டு நிற்பர்.ஆசார்யோத்தமனை அநுபவித்துச் சிலர் ஒன்றுகூடித் ''தூப்புல் குலத்தரசே! அருள் தரும் ஆரணதேசிகனே! கவிதார்-கிகசிங்கமே! எங்கள் காவலனே!'' என இப்புடைகளில் அவன் திருநாமங்களை வாயாரச் சொல்லிக்கொண்டு நிற்பார்கள். இப்படி அடியார்களின் பரிமாற்றத்-தாலும் மற்றும் ஸ்ரீஸ்வாமியின் பிருதங்களின் கீர்த்தனத்தாலும் ஏற்பட்ட ஓர் பேரொலியானது, வானுயரின்பம் மன்னிவீற்றிருக்கும் நித்யஸூரிகளையும் அழைத்து இந்தத் திருவோலக்கத்தில் கலந்துகொள்ளுமாறு கூவி அழைப்ப-தோடு, திக்குகளில் உள்ள எல்லா அமங்களங்களையும் இருந்த இடம் தெரியா-மல் போக்கடிக்கிறது என்னலாம்.

இவ்வளவு ஆரவாரங்களுக்கிடையே இந்தக் கவிதார்கிகசிங்கம் தொண்ட-ரடிப்பொடி உள்ளே நுழைந்து திரும்பி ராகவஸிம்ஹத்தை மங்களாசாஸனம் செய்து யமுனைத்துறைவன் ப்ரதக்ஷிணத்தில் கோவில் கொண்டிருக்கும் திருவனந்தாழ்வான், கருமாணிக்க வரதன், மடப்பள்ளி நாச்சியார், கண்ணன் இவர்களை மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டு பெரியபிராட்டியாரின் ஸந்நி-திக்குள் எழுந்தருளுவர். பெரியபிராட்டியாரும் ஸர்வாபரண பூஷிதையாய் ஸேவை ஸாதிப்பர். பிராட்டியின் திருமுகத்தில் அன்று தனியான சோபை தோன்றும்.பிள்ளைகளின் பிறந்ததினம் என்றால் தாயன்றோ முதலில் ஸந்தோ-ஷிப்பது. பிறந்ததினத்தில் பிள்ளைகளுக்குப் புதிதாக வஸ்த்ரங்களோ அல்லது இன்னும் ஏதாவது பரிசுகளோ வழங்குவது பெற்றோர்களின் ரீதி. அதுபோல் ஸ்ரீஸ்வாமி தன்னுடைய அவதாரதினத்தன்று ஜகந்மாதாவாகிய தம்மை ஸேவிக்க வரும்போது தம்முடைய பிள்ளைக்கு ஏதாவது நூதனமானதாக வழங்கத் திருவுள்ளம் பிராட்டிக்கு. ஸாமாந்ய பிள்ளைகளுக்கே லோகத்தில் புதிதாகப் பரிசுகள் வழங்குவது வழக்கமாயிருக்கத் தம்முடைய (பிராட்டியி-னுடைய) பரத்வத்தை லோகத்தில் திறமாகச்சொல்லி அஞ்சலிஹஸ்தராகத் தம்மை ஸேவிக்க வரும்பொழுது தாம் இவருக்கு ஏற்ற பாரிதோஷிகம் பண்ண நினைப்பது பெரியபிராட்டியாரின் ஸ்வபாவத்துக்கு ஒக்கும். என்ன பாரி-தோஷிகம் தருவது என யோசித்து ஐச்வர்யத்தைக் கொடுத்தால், ''அஸ்தி மே ஹஸ்திசைலாக்ரே வஸ்து பைதாமஹம் தனம்'' என்று தனக்கு வேண்டியது தாயதநமாக ப்ராப்தமாகிஇருக்கிறது. ஆகையால் வேண்டாம் என்று வேறு யாராவது ப்ரஹ்மசாரிக்கு வாங்கிக்கொடுப்பவர். கைவல்யம் எனப்படும்

ஆத்மாநுபவத்தைக் கொடுத்தால், அது நச்வரம் எனக்குத் தேவையில்லை என்பர். ஆகையால் என்ன பண்ணுகிறது என யோசித்து இவருக்கு ப்ரார்த்த-நீயமான அம்சமொன்றுள்ளது - அதாவது, தாமும்(பிராட்டியாரும்) அவருமாகச் (பெருமாளுமாகச்) சேர்ந்துநிற்கிற நிலையை ஸதா நம்முடையஅருகாமையில் இருந்துகொண்டு இந்த லோகத்தில் ஸேவித்துக்கொண்டிருக்கவேண்டும் என்பதுதான் -''த்வதஞ்சேத் ப்ரஸீதஸி தவாஸ்மி ஸமீபதஸ்சேத்'' - என்று அல்லவோ இவர் ப்ரார்த்தனை. அதை அடையுமாறு நாம் ''அஸ்து தே'' என க்ருபை பண்ணி அனுக்ரஹிப்பதுதான் இவர் ஏற்கும் பாரிதோஷிகம் எனத் திருவுள்ளம்போல் பிராட்டி ஸேவை ஸாதிப்பர். பெரியபிராட்டியாரின் இந்தத் திருமுகப்பாசுரத்தின் மாஹாத்ம்யத்தால்தான் பெருமாளும் இவருடைய ப்ரார்த்தனைக்கு இணங்கி இன்றும் புறப்பாடு கண்டருளும்போதெல்லாம் ஸ்ரீஸ்வாமிக்கு ஸேவை ஸாதித்து ஸ்ரீசடாரியை ப்ரஸாதித்த பிறகே மேலே உத்ஸவம் கண்டருளுகிறார். பிராட்டி முன்பாக ஸ்ரீஸ்வாமி நான்கு தரம் தெண்ட-னிட்டு நிற்பர். உபஹாரங்கள் ஸமர்ப்பிக்கப்படும்.பிறகு ஒருகற்பூரஹாரத்தி பண்ணுவார்கள் பிராட்டிக்கு அர்ச்சகர்கள். அப்போது பிராட்டிவிஷயமாக உள்ள அநேக ஸ்தோத்ரங்களையெல்லாம் அடியார்கள் அநுஸந்திப்பர். திவ்ய தம்பதிகளைச் சேர்த்துச்சொல்லும் பாசுரங்கள் எல்லாம் ரஸம் அறிந்தவர்களால் அநுஸந்திக்கப்படும்.

பிறகு ப்ரதக்ஷிணமாக ஏள்ளித் திரும்புமுன் ஒரு ப்ரஹ்மசாரி ஸ்வாமிக்குப் பூர்வம் பெரியபிராட்டியார் க்ருபை பண்ணின விஷயத்தின் ஞாபகார்த்தமாக ''யோகாரம்ப . . . . வஸூனாம்'' என்கிற ஸ்ரீஸ்துதி ச்லோகம் அநுஸந்தானம் ஆனவுடன் நேராக வெளியில் கோலப்படியில் ஸ்ரீஸ்வாமி ஏள்ளுவர். இருபுற-மும் ஸ்ரீவைஷ்ணவர்கள் கோஷ்டியாக நின்றுகொண்டு ஸ்ரீஸ்துதி பூராவும் அநுஸந்திப்பர். அப்பொழுது பிராட்டியாரிடம் இருந்து ஸ்ரீசடாரி, மாலை இவைகளை அர்ச்சகர்கள் சத்ரசாமராதிகளுடன் எழுந்தருளப்பண்ண, கட்டியக்-கார ஸ்வாமி கட்டியம் சொல்ல, ஸ்வாமிக்கு மர்யாதைகள் நடைபெறும். கோஷ்-டிக்குத் தீர்த்தப்ரஸாதங்கள்ஆனவுடன் ஸ்ரீஸ்வாமி பிராட்டியிடம் நியமனம் பெற்று, திரும்பி வேதாத்மாவைமங்களாசாஸனம் செய்துவிட்டு அவுணன் உடல் கீண்டுகந்த ஆளரியை அடிபணிந்து கோதையைத்தொழுது விஷ்வக்ஸேநரை இறைஞ்சி பத்தர்வினை தொத்தறவறுக்கும்அத்திகிரியை வணங்கி அதன் மேலே இருக்கும் கற்பகத்தை மங்களாசாஸனம் செய்ய ஏறியருள்வர். பிறகு தமக்கு அம்மாளிடமிருந்து ஏற்பட்ட ஒரு விசேஷ அனுக்ரஹத்தை நினைத்துக் காலக்ஷேபம் நடந்த இடத்திலே சென்று நமஸ்கரித்துத் திரும்பி, திருமகள் மண்மகள் நீளை முதலா எல்லாத்தேவியரும் திகழ்ந்துநிற்கும் பேரருளாளனை-மங்களாசாஸநம் செய்ய ஸந்நிதிக்குள் எழுந்தருள்வார்.

இதற்குள் அடியார்கள் ஸமூஹமானது, இடம் கொள்ளாமல் நிறைந்துவிடும். ஸ்ரீஸ்வாமி தேசிகனுடன் எம்பெருமானை ஸேவிக்கவேண்டும் என்ற ஆர்வத்-தால்நான் முன்னே, நான் முன்னே என்று உள்நுழைவார்கள். ஸ்ரீவைஷ்ண-வர்கள் ஒருவரை ஒருவர் புரஸ்கரித்துக்கொண்டு எம்பெருமான் ஸந்நிதிக்குப் போகவேண்டியது முறை ஆயினும், ஆசார்யனும் பெருமாளும் சேர்ந்துள்ள இந்த ஸேர்த்தியை ஸேவிக்கவேண்டும் என்கிற ஓர் கரை புரண்ட அவாவானது இப்படி முறைகெடச் செய்வது ஆச்சர்யம் இல்லை. நித்யஸூரிகளின் திரளிலும் உண்டிறே இந்தமாதிரியான கோலாஹலம்.விஷ்வக்ஸேநர் ஏள்ளியன்றோ அங்கு அமைதியை நிலவும்படிச்செய்யவேண்டியிருக்கிறது.இவ்வளவு கோலாஹலத்துடன் ஸ்ரீஸ்வாமிதேசிகன் அருளாளனை மங்களாசாஸனம் செய்ய அருகாமையில் ஏள்ளுவர்.

பெருமாள் ஸமீபத்தில் உள்ள அர்ச்சகர்கள் ஸ்ரீஸ்வாமி தேசிகன் ஏள்ளியி-ருக்கும் கைத்தலத்தைக் கைப்பற்றி எம்பெருமானின் பர்யங்கத்தின் அடியில் வெகுஸமீபத்தில் எழுந்தருளப்பண்ணுவர்.

அவ்வமயம் ரஜதகிரியின் மேல் ஓர் மரகதகிரி இருந்தாப்போலே ஸேவை-ஸாதிக்கும் அழகை என்னவென்று எழுதுவது! சொல்வது! ‘‘கண்ணன் கரிகிரி மேல் நின்று அனைத்தும் காக்கின்றான்’’ என்று ஸ்வாமி அனுபவம்.அதற்கு ஏற்றவாறு கண்ணனாக ஸேவை ஸாதிக்கத் திருவுள்ளம் பற்றினான்போலும் ‘‘கண்ணன் என்னும் கருந்தெய்வம்’’. திருமுடியில் அழகிய சவுரிக்கொண்டை, ப்ரளயகாலத்தில் பகல் இரவு என்கிற பிரிவில்லாத ஜகத்வ்யாபரிக்கும் தமஸ்-ஸின் வெளிஅம்சத்தைத் தள்ளி உள்ளே உள்ள இருளின் அம்சத்திற்கு ஸத்ருச-மான நிறத்தை உடையது என்னலாம்படி அம்மாயன் திருக்குழல்கற்றைகள். அந்த சவுரியின் ஒருபார்ச்வத்தில் இதற்குப் பாபாகமாயுள்ள ஒரு சிவப்புக்-கொண்டை கொச்சுக்கள் தொங்கும்.இந்தக் கொண்டையின் மத்தியில் கதிரா-யிரம் இரவி கலந்தெரித்தால் ஒத்த பளபளப்பாய் உள்ள ஓர் கல்கத்தூரா துலங்கும். கொண்டையின் இரு பார்ச்வங்களில் சந்திரசூரியன் எனப்படும் இரண்டு திருவாபரணங்கள் ஜ்வலிக்கும்.அடிப்பாகத்தில் கட்டியானது தொங்-கும். நடுவில் மயில்தோகை ஒன்று சொருகப்பட்டிருக்கும். கொண்டையின் நுனியில் கனகாம்பரம் எனும் புஷ்பத்தாலாகிய ஓர் ஸரம் சுற்றப்பட்டிருக்கும். கறுத்த சவுரிக்கொண்டையில் சிவந்த புஷ்பமும், வைரங்களாலாகிய திருவா-பரணமும், நாநாவித வர்ணங்களோடு கூடிய மயில்தோகையும் ஸேவிப்பவர் மனத்தை அபஹரித்தேதீரும்.திருமுகமண்டலத்தில் அன்றைக்கென்று தனியான ஓர் அபிப்ராயத்துடன் கூடிய புன்முறுவல் திகழும். மனிசர்க்காய் நாட்டில் பிறந்து படாதன பட்டும் அவர்கள்திருந்தாதுபோனதைக் கண்டு மனம் நொந்து

பரமபதத்திற்கு ஏள்ளும்போது இருந்த குறையைத் தீர்த்து அவர்கள் எல்லோ-ரையும் கடல்வண்ணன் பூதங்களாய் மண் மேல் திரியும்படிப்பண்ணின மஹாபுருஷன் தன் திருவடிகளில் அடிபணிந்திருப்பதைப்பார்த்து இந்த மஹா-னுக்குச் செய்யும் பாரிதோஷிகமோ அம்முறுவல்! ‘க்ஷிபாமி’ என்கிற தன்னு-டைய நிக்ரஹஸங்கல்பத்தை மாற்ற இந்த அஞ்சலியாகிறப்ரத்யஸ்த்ரத்தை இவர் லோகத்திற்குக் காட்டியவாறு ஏள்ளியிருப்பதைப் பார்த்துச் செய்யும் முறுவலோ அல்லது அங்கே குழுமியிருக்கும் அடியார்களின் சிந்தைகளை ஏககாலத்தில் அபஹரிக்கவேண்டிச் செய்கிற சூழ்ச்சியோ அம்முறுவல் அறியோம். அவன் முகத்தைக்காட்டி அதற்குமேல் ஒரு புன்முறுவல் செய்தானாகில்இவர்கள் இடத்தினின்றும் அபஹரிக்கப்படாத வஸ்து ஒன்றும் இல்லையிறே. இந்த எழில்மதி திகழ்ந்த வதனத்தின் இரு பார்ச்வங்களிலும் ‘‘மகரகுண்டலங்கள் வில் வீச’’ என்கிறபடி இரண்டு மகரகுண்டலங்களும், திருக்கையில் ஜ்வலிக்கும் ரத்னங்களாலாகிய ஆழ்வார்களும், சங்குசக்கரங்களும் இவ்வளவு மேன்மை-யும் அழகும்எம்பெருமானுக்குச் சேர்வதற்குக் காரணமாயுள்ள ஒரு உயர்ந்த திருமகள், திருமேனியிலணிந்திருக்கும் ஸகல திருவாபரணங்களுக்கும் மேல் அதிவிசாலமான திருமார்பில் இறையும் அகலகில்லாது ப்ரகாசிக்கவும், அஞ்சலிஹஸ்தராய் அடிபணிந்துநிற்கும் ஸ்ரீஸ்வாமியைக் கடாக்ஷித்து இதுவே அமையும், அஞ்சேல் என்று கை குவியும் அபயஹஸ்தமும் திருவரையில் பொருந்திய பொன் ஒத்த பீதாம்பரமும் உலகடைய நின்ற இணையடிகளும், அன்று நம் ஸ்வாமிக்கு என்று அர்ச்சையில் விபவத்தை ஆகர்ஷித்தான் என்னலாம்படி ஸேவை ஸாதித்தான் ப்ரபு. திருமேனியில் ஸ்ரீஸ்வாமிக்குப் பாரிதோஷிகமாக அளிப்பதற்கு என்று விலை உயர்ந்த தகடியானது, திருவாழி திருச்சங்குகளைச் சற்று மறைத்தும் மறைக்காததுமாகச் சாற்றப்பட்டுஇருக்கும். பெருமாளின் திருமேனியில் பரிவுள்ள அந்தரங்க கைங்கர்யபரர்கள் பெருமா-ளின் ஸேவை பரிபூர்ணமாக ஆனால் யார் கண்ணாவது பட்டுவிடப்போகிறதே என்று எண்ணிப் பெருமாளின் சில அங்கங்களை மறைத்துவைக்கிறார்கள் போலும். நறுமணம் கமழும் புஷ்பங்களாலாகிய ஒரு பெரியமாலையும் திருமேனியில்சாற்றப்பட்டிருக்கும். பலவிதமான உபகாரங்கள் ஸமர்ப்பிக்-கப்படும்.ஸ்ரீஸ்வாமி நன்றாக அருளாளனை மங்களாசாஸனம் செய்யும் பொருட்டுப் பெரியதொரு கற்பூர ஹாரத்தியாகும். அப்பொழுது அங்கே ஒன்று சேர்ந்திருக்கும் பக்தகோடிகள்அனைவரும் ஆழ்வார் ஆசார்யர்களாலும் ஸ்ரீஸ்வாமி தேசிகனாலும் அருளாளன் விஷயமாக அருளப்பட்ட ஸ்தோத்ரங்-களையும் பாசுரங்களையும் அநுஸந்திப்பர். பெரிய மஹான்களும் ஆசார்ய-பதம் செலுத்தும் ஸ்வாமிகளும் இந்த அரியஸந்தர்ப்பத்தை இழக்கலாகாது என எண்ணிப் பலவிடங்களிலிருந்து வந்திருப்பார்கள்.அப்படிப்பட்ட மஹான்கள்

எல்லாம் ஸ்ரீஸ்வாமியின் ஸ்தோத்ரத்தை அநுஸந்தானம் பண்ணும்போது நீர்மல்கு கண்ணினராகி நெஞ்சம் குழைந்து நைந்துநிற்பர்கள். பேரருளாளனும், அவன் ஒருவனுமே புகல் என்று நமக்கெல்லாம் காட்டித்தந்த தேசிகோத்-தமனும், அப்பேரருளாளனைப் பரிபூர்ணமாக அனுபவித்து அந்த அனுபவ ஜநிதமாய் உள்ள ஸ்தோத்ரங்களின் அநுஸந்தானமும், ஒரே இடத்தில் ஒரே காலத்தில் கிடைக்கப்பெற்றால் இதைவிட என்ன பாக்யம் உள்ளது ? இம்மேதி-னியில் விதியினால் இருக்கப்பெற்றவர்களுக்கே இது கிடைக்கும். வலயபேட்டை ஸ்வாமி (ஸ்ரீநிவாஸ தாதாசார்ய ஸ்வாமி) ஒரு ஸம்வத்ஸரம் இந்த மஹோத்-ஸவத்திற்கு ஏள்ளியிருந்தபோது இந்த ப்ரகரணத்தில் அந்த ஸ்வாமி ஏள்ளி-யிருந்த நிலையை அடியேனால் வருணிக்கமுடியாது. அருளாளனின் அளவுகடந்த அத்யத்புதஅலங்காரத்தையும் அந்த அரிய சந்தர்ப்பத்திற்கு அமைந்தவாறு அநுஸந்தானம் செய்யும் அருள்மொழிகளைப்பார்த்து உளம் பூரித்து உடம்பெலாம் மயிர்க்கூச்சலெரிய உருகி, ''என்ன ஸேவை! என்ன ஆனந்தம்! என்ன அநுஸந்தான வைகரி! என்ன ஸம்ப்ரதாய நிஷ்ணாதர்களான மஹான்களின் ஏற்பாடு!'' என்று இப்புடைகளில் அந்த ஸ்வாமிக்கென்று அஸாதாரணமாய் ஏற்பட்டுள்ள இனிமையும் மாதுர்யமும் கூடிய திருவாக்கால் ஸாதித்தாயிற்று.

ஒருபுறம் நிற்கட்டும் இது. போலீஸ் அதிகாரி நம் ஸம்ப்ரதாயமே தெரியாத ஒரு மஹாபுருஷர் இந்த ஸேர்த்தியை ஒருவரும் ஸேவிக்காமல் இருக்கக்-கூடாது என்று அங்கே குழுமியிருந்த ஸ்த்ரீ, புருஷர்கள் எல்லோரையும் கொஞ்சம் கொஞ்சமாகத் தானே கொடித்தோன்றும் தோரணவாசலில் நின்று உள்ளே விட்டு ஸேவிக்க ஏற்பாடு செய்தார். அன்றுதொட்டு இன்று பர்யந்தம் அதே மாதிரியாக நடந்துவருகிறது.

கண்ணன் அடைக்கலம் கொள்ளக் கடன்கள் கழற்றிய தமிழ்வேதம் அறிந்தவர்கள் ''அம்ருத இஹபவதி'' என்றும் ''விண்ணவர் வேண்டி விலக்கின்றி மேவும் அடிமை எல்லாம் மண்ணுலகத்தில் மகிழ்ந்தடைகின்றனர்'' என்றும் சொல்லுகிறபடி பர்யங்க வித்யையில் ஓதப்படுகிற ரீதியில் பர்யங்க ஆரோ-ஹணம் செய்து அருளாளனோடு பரஸாம்யத்தை அடைவர்கள் என்கிறதை ஸ்ரீஸ்வாமி தத்காலம் அருளாளனின் பர்யங்கத்தின் கீழ் அதிஸமீபத்தில் ஏள்ளியிருக்கிற இருப்பால் லோகத்திற்குப்ரத்யக்ஷமாய்க் காண்பிக்கிறார்கள்.

இந்த இருப்பு என்றைக்கும் மாறாதே இருக்கவேண்டும் எனப் பக்த-கோடிகள் அனைவருக்கும் ஆசையானது உண்டாகியிருப்பினும் காலத்திற்கு வசப்பட்ட தேசம் ஆகையாலும் ''ஸதா பச்யந்தி'' என்பது பரமபதத்திலே ஆகையாலும், உடனே கட்டியம் ஸ்வாமி, ''எத்ஸரிகை ஸ்வாமி எத்ஸரிகை''

என்று கட்டியம் சொல்ல ஸ்ரீஸ்வாமி தேசிகனும் அருளாளனுக்கு எதிரில் உள்ள கோலப்படியில் ஏள்ளிநிற்பர்.

ரஸிகர்களான அர்ச்சகர்கள் பெருமாள் சாற்றிக்கொண்டிருக்கும் மாலை-யையும் உபயநாச்சிமார்கள் ஸமர்ப்பித்துக்கொண்டிருக்கும் புஷ்பத்தையும் களைந்து ஒரு பெரிய தட்டில் வைத்துப் பிறகு நாச்சிமார்களையும் தழுவிக்-கொண்டு பெருமாள் ஸமர்ப்பித்துக்கொண்டிருக்கும் தகடி, பரிவட்டம், ஸ்ரீசடாரி, சந்தனம், திருத்துழாய், அபயஹஸ்தம், பவித்ரம் முதலியவைகளை அந்தத்தட்டில் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு முன்னே கை தீவட்டியும் கட்டியம் சொல்வாரும் செல்ல, சத்ர சாமராதிகள் பின்தொடர வெகு நிதானமாக ஸ்வாமி தேசிகன் ஏள்ளியிருக்கும் இடத்தில் வந்து ஸ்வாமி தேசிகனுக்கு ஸகல மர்யாதைகளையும் நடத்துவார்கள். இருபுறத்திலும் ஸ்ரீவைஷ்ணவர்கள் கோஷ்டியாக நின்றுகொண்டு வரதராஜஸ்தவம், வரதராஜபஞ்சாசத் முதலிய ஸ்தோத்ரங்களை அனுஸந்திப்பர்கள். கோஷ்டிக்குத் தீர்த்தம், சடாரி முதலிய-துகள் ஆனவுடன் ஸ்வாமி வையமாளிகை எனும் ப்ரதக்ஷிணத்தில் கச்சிவாய்த்-தான் மண்டபத்துக்கு எழுந்தருளுவர். அங்கே எல்லோரும் ஸ்வாமியால் அருளப்பட்ட ஸ்தோத்ரங்களை அநுஸந்தித்துக்கொண்டிருப்பர்கள்.பெருமாள் உயர்ந்த ப்ரஸாதங்களை அமுதுசெய்வர்.பிறகு ஸ்வாமி ஸ்ரீதேசிகனும் அமுதுசெய்து கோஷ்டிக்கும் விநியோகமாகும்.

இனி நடக்கப்போகும் உத்ஸவத்தின் பெருமையை பேரருளாளன் பெருமை பேசக் கற்றவர்கள் பேசவேண்டுமே ஒழிய அடியேன் என்னவென்று பேசுவது! பரப்ரஹ்மமும், நித்யமுக்தர்களும் ஒன்றுகூடி யதேச்சையாக விஹரிப்பதன்றோ பரமபதத்தில் போய் செய்யும் கார்யம்?அவ்விஹாரத்தை இங்கேயே நம் ஆசார்யோத்தமனுக்குக்கொடுக்கத் திருவுள்ளம் பற்றினான் போலும் பேரருளாளன்.அத்விதீயமான ஒருதோளுக்கினியானில் அருளாள-னும் நாச்சிமார்களும் புறப்பாட்டிற்கு ஸித்தமாவார்கள்.''அத்திகிரி அருளாளப்-பெருமாள் வந்தார்'' ''ஆனை பரி தேரின் மேல் அழகர் வந்தார்'' என்கிற ஒலியைப் பரப்பிக்கொண்டு திருச்சின்னமானது பரிமாறப்படும். ஸம்ப்ரதாயம் இருந்த இடம் தெரியாமல் சீர்குலைந்திருக்கும் காலத்தில் ஆறு வார்த்தை திருவாய் மலர்ந்தருளி நம் ஸம்ப்ரதாயத்தை உத்தரிப்பித்த அருளாளனின் பரிவாரங்களும், ஸம்ப்ரதாய ஸூக்ஷ்மார்த்தங்களை வெளியிடக்கேட்பானேன்? திருச்சின்னமானது மந்த்ரத்ரயார்த்தங்களை வெளியிடுகிறது. தோளுக்கினி-யானோ, அதிஸூக்ஷ்மமான அர்த்தத்தை வெளியிடுகிறது.பெருமாள் பின்பும், உபயநாச்சிமார்கள் சற்று முன்பும் தோளுக்கினியானில் ஏள்ளியிருப்பர்கள். புஷ்பங்கள், மாலைகள் ஒன்றும் இல்லாமல் இருக்கும்போது இந்த அழகு நன்கு

ஸேவையாகும். இந்த ஆசார்யோத்தமனுக்கும் அங்கே சேர்ந்திருக்கும் பாகவதோத்தமர்களுக்கும் க்ருபை செய்யப் பெருமாளின் த்வரையை அஸத்கல்பமாக்கி நாச்சிமார்கள் முந்திக்கொண்டு க்ருபை செய்ய யத்தனிக்-கின்றனர் என்கிற சாஸ்த்ரார்த்தத்தைத் தோளுக்கினியான் வெளியிடுகிறதோ என்னலாம்படியிருக்கும். ''அக்ரதஸ்தே கமிஷ்யாமி'' என்றல்லவோ பிராட்டி-யின்வார்த்தை! அல்லது எம்பெருமானையடைய அஞ்சினவர்க்கு நாம் முன்னேறியுளோம். நம்மை ஆச்ரயித்து அவனிடம் செல்லுங்கோள்! உங்களுக்கு அபயம் ஏற்படும் என்கிற அர்த்தத்தை வெளியிடுகிறதோ என்னலாம் படியிருக்கும்.

கர்ப்பக்ருஹத்தில் இதுகாறும் அடைபட்டிருந்த ஓர் அழகுவெள்ளமானது உடைபட்டு வெளியே ப்ரவஹிக்கலாயிற்று.மலர்மகளுடனும், அவனிமகளு-டனும் ஒரு ஜ்யோதிப் புஞ்சம் வெளிக்கிளம்பியது. ஸ்வாமிதேசிகன் பெருமாளை முன்னே ஸேவித்துக்கொண்டே ஏள்ள, பெருமாளும் தங்கக்குடை அசைய, பின்னே அன்னநடை இட்டுக்கொண்டு மெல்ல அசைந்து அசைந்து ஏள்ளுவர். பக்தகோடிகள் அனைவரும் தலைமேல் கையைக் கூப்பினவாறே நிற்பர். நம் ஆசார்யோத்தமனுக்கு என்று ஓர் தனிப்புகர் பெருமாள் திருமே-னியில் ஸேவையாகும்.திருமேனியில் ஏற்கனவே சாற்றப்பட்டிருந்த மாலை-யானது களையப்பட்டு ஸ்வாமிக்கு மர்யாதை ஆகிவிட்டது.இப்போது சிவந்ததாயுள்ள செங்கழுநீர் புஷ்பத்தாலான ஒரு சரம் சாற்றப்பட்டிருக்கும். இதுகாறும் மறைந்திருந்த பின்புற ஸேவையானது எல்லோருக்கும் ஸேவை-யாகும். ஸாத்மிக்க ஸாத்மிக்க போகத்தைக்கொடுப்பவன் ஒருவனாகையால் ஏககாலத்தில் முன்னும் பின்னும் ஸேவைஸாதித்தால் ஸேவிப்பவர்களின் ஸத்தைக்கு ஹாநி ஏற்படும் என்கிற திருவுள்ளம்போலும். முன்ஸேனையை ஸேவித்துஸாத்மித்தவாறே க்ருபை பண்ணுகிறான் ப்ரபு. திருக்குழல் கற்றைகள் ஒன்றாகச்சேர்த்து வெகு அழகாக முடிச்சிடப்பட்டிருக்கும்.அம்முடிமேல் ஓர் கனகாம்பர சரம் சூட்டப்பட்டிருக்கும்.நவரத்நங்களாலாகிய ஒரு ராக்கடி சவுரிக்கொண்டையின் பின்புறத்தில் சாற்றப்பட்டு இருக்கும். ராக்கடியைச் சுற்றிப் புஷ்ப சரங்கள். ''கற்பகக்கா என நற்பல தோள்கள்'' என்கிறபடி உருண்டு திரண்டிருக்கும் திருத்தோள்களில் ''பாஜிபந்து'' எனும்திருவாபரணமும் அதன் மத்தியில் உள்ள திருமுதுகில் ஓர் அழகிய பதக்கமும், திருவரையில் அரைநூல் ஹாரங்களும் இவ்வளவுக்கும் மேல் யஜ்ஞோபவீதமும் துலங்கும் இந்தப் பின்னழகை ஸேவித்துவிட்டுப் பின்னேயே தங்கிவிடுவர் சிலர். முன்னே நின்றவர்கள் முன்னேயே.மற்றும் சிலர் முன்னும் பின்னுமாக ஓடுவார்கள். என்ன செய்வது?எங்கு இருக்கிறோம்?கரிகிரியிலா?பரமபதத்திலா?என்றும் புரியாது.

**பங்கயக்கண்ணன் என்கோ? பவளச்செவ்வாயன் என்கோ?**
**அங்கதிர் அடியன் என்கோ? அஞ்சனவண்ணன் என்கோ?**
**செங்கதிர் முடியன் என்கோ? திருமறுமார்வன் என்கோ?**
**சங்குசக்கரத்தன் என்கோ? சாதிமாணிக்கத்தையே!**

என்று ஆழ்வார் படியில் பெரிய வாதத்தில் பலோபதானம் பண்ணுவாரைப்போலே திகைப்பார்கள் சிலர். மற்றும் சிலர் இந்த அழகுவெள்ளத்திற்கு எதை உவமையிடுவது என்று எண்ணி,

**கட்டுரைக்கில் தாமரை நின் கண் பாதம் கை ஒவ்வா**
**கட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி ஒளி ஒவ்வாது**
**ஒட்டுரைத்து இவ்வுலகு உன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும்**
**பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ.**

என்கிறபடி ஒவ்வொன்றை உபமானமாக்கி அது பொருந்தாதபடி கண்டு ஒன்றும் ஸத்ருசமான உவமையாகச்சொல்லமுடியாமல் நிற்பர்.ஒரு மஹான் இவ்வளவு பரிச்ரமப்படாது நம் ஆசார்யோத்தமன் பற்றின நிலையைப் பின்பற்றி ''அருளாளர் தாம் எனினும் தமக்கு ஒவ்வாரே'' என்று சொல்லிமகிழ்வர். சிலர் எம்பெருமானை அனுபவித்துக்கொண்டே போகுமளவில் அந்த அநுபவ மேலீட்டால் தங்கள் ஆத்மா தரித்து நிற்பதற்காக வெண்சாமரங்களை எடுத்து வீசுவார்கள்.சிலர் திருவாலவட்டம் பரிமாறுவார்கள். சிலர் தூபம் கமழப்பண்ணுவார்கள். பெரிய மஹான்கள் எல்லோரும் இந்த நிகழ்ச்சி காலதத்வம் உள்ளவரையிலும் இருக்கக்கூடாதா என்று எண்ணுவர்.ஸ்ரீபாதம் தாங்கிகள் சற்று விரைவாகப் பெருமாளை ஏள்ளப்பண்ணும்போது அது ஸஹியாது. ஸ்ரீநாவல்பாக்கம்ஸ்வாமி உடன் தாமே பெருமாளைத்திருத்தோள்களில் எழுந்தருளப்பண்ணிக்கோண்டு அடி மேல் அடி வைத்து ஏள்ளப்பண்ணியாயிற்று. ஸ்ரீகருடபுரம் ஸ்வாமி இந்த ஆச்சர்யமான ஸேர்த்தியை ஸேவித்து அப்படியே ஸ்தம்பித்து நின்றாய்விடும். ஸ்ரீகோழியாலம் ஸ்வாமி இந்தச் சமயத்தில் பெருமாளின் அத்யாச்சர்யமான ஸேவையும் ஸ்ரீஸ்வாமி தேசிகன் எதிர்நின்று அருளாளனின் ஸேவையை வாரிப் பருகிக்கொண்டு நல்வீடு பெறினும் வேண்டாம் என்கிற பாவம் முகத்தில் ப்ரதிபலிக்கும்படி ஸேவை ஸாதிக்கும்படியையும் கண்டு ஆனந்தபரிதராகி அந்த ஸ்வாமியின் ப்ரபாவத்திற்கு ஏற்றவாறு தலையினோடாதனம் தட்டுத்தடுகுட்டமாய்ப் பறப்பர். ஸ்ரீ திருக்கோட்டியூர் ஸ்வாமி இந்த அழகிய சேர்த்தியைக் கண்ணாரக் கண்டு களித்து அக்களிப்பின் மேலீட்டால் பெருகும் அருள்மொழிகளைக் கொண்டு அருகில் உள்ளோர்களைப் பிச்சேற்றப்பண்ணுவர். ஸ்ரீ அய்யாத்து

ஸ்வாமி அங்கே குழுமியிருக்கும் மஹான்களையெல்லாம் ஒன்றுசேர்த்து அவ்வப்போது எம்பெருமானுடைய ஆபிரூப்ய ஆவிஷ்காரங்களையும் அந்த இடங்களில் உள்ள விசேஷங்களையும் எடுத்துச்சொல்லி ஆனந்திப்பர். இப்படி விலக்ஷணமான மஹான்களின் கோஷ்டியானது இந்தப் பெருவெள்ளத்தில் அகப்பட்டுத் தடுமாறிநிற்கும்.அடியார்களின் ஆனந்தப்பெருக்கால் பரிமாறும் இந்தப் பரிமாற்றங்களைக் கண்டு பெருமாளுடையவும் ஆசார்யதோத்தமனு-டையவும் திருமுகமண்டலங்களில் தூமுறுவல் நடையாடும். நம்முகம் அடியார்களை நன்றாக மையல் ஏற்றிமயக்குகிறது என்கிற பாவமோ அருளா-ளனுடைய தூமுறுவலக்கு, நாம் பண்ணிய க்ருஷி பலித்தது என்கிற பாவமோ ஆசார்யனுடைய தூமுறுவலக்கு, அறிகிலோம்.

இப்படிப் பெருமாளும் ஸ்ரீஸ்வாமியும் அடிமேல் அடி வைத்துத் திருமலை-யினின்றும் கீழ் இறங்குவர்.திருமலையின் முன் மண்டபத்தில் பெருமாள் ஏள்ளித் திரும்பிநிற்பர். பத்துப்படிகளின் கீழ் ஸ்ரீஸ்வாமி நிற்பர்.பக்தகோடிகள் அனைவரும் ஆசார்யனைச் சூழ்ந்துகொண்டு நிற்பர்கள். இந்த ஸந்நிவேசத்தை ஸேவித்தால் ஆசார்யனாகிற முதல்படியில் ஏறி பிறகு ஒன்பது படிகளில் க்ரமமாக ஏறினால் அங்கு ஸேவை ஸாதிக்கும் அயர்வறும் அமரர்கள் அதிபதியை அடையலாம் என்கிற சாஸ்த்ரார்த்தம் வெளியாகும் என்னலாம். பரமபதத்திற்கு ஸோபாநம் கட்டியவர் நம் தூப்புல்பிள்ளை அன்றோ! இப்படியே பெருமாளும் தேசிகனும் ப்ரதக்ஷிணமாக ஏள்ளுவர்கள்.நடுவில் மலையாளநாச்சியாரிடமிருந்து மரியாதை நடைபெறும் ஸ்ரீஸ்வாமிக்கு. இருவ-ருமாக அபிஷேக மண்டபம் எழுந்தருளக் குறைந்தது இரண்டு மணி காலம் ஆகும். நடுவில் அழகியசிங்கர் திருமண்டபத்தில் இருந்து தேசிகன் ஸ்ரீதேவா-திராஜனின் பின்னழகை அனுபவித்துக்கொண்டு ஏள்ளுவர். ஸ்ரீஸ்வாமி தேசிகனின் திருவவதார தினம் வெள்ளிக்கிழமையாக அமைந்தால் பெரிய-பிராட்டியாரும் தம் ஸந்நிதியில் இருந்து ஏள்ளிப் பெருமாளுடன் கலந்து-கொள்வர். அப்போது எல்லோரும்,

**த்வாமேவாஹு: கதிசிதபரே த்வத்ப்ரியம் லோகநாதம்**
**கிம் தைரந்த: கலஹமலிநை: கிஞ்சிதுத்தீர்ய மக்நை:।**
**த்வத்ஸம்ப்ரீத்யை விஹரதி ஹரௌ ஸம்முகீநாம் ஶ்ருதீநாம்**
**பாவாரூடௌ பகவதியுவாம் தம்பதீ தைவதம் ந:।।**

என்கிற ச்லோகத்தை அனுஸந்திப்பர். இருவருமாக அபிஷேக மண்டபத்-தின் மேலே ஏறித் திரும்பி பக்தகோடிகளை கடாக்ஷிப்பர். ஸ்ரீஸ்வாமி தேசிகன் சற்று தூரத்தில் ஏள்ளியிருப்பர். அப்பொழுது திருஷ்டி கழித்து ஒரு கற்பூர-

ஹாரத்தி நடக்கும். பிறகு பெருமாளும் பிராட்டியும் ஸமர்ப்பித்துக்கொண்டி-ருக்கும் செங்கழுநீர் சரங்களை ஸ்ரீசடாரியுடன் ஸ்ரீஸ்வாமிக்கு மர்யாதை நடக்கும்.அப்போது பக்தகோடிகள்அனைவரும் முக்கியமான ச்லோகங்களை அனுஸந்தானம் பண்ணுவர்.ஸ்ரீஸ்வாமி தேசிகனுக்கு அவ்வமயம் ஒரு உயர்ந்த பிருதானது பேரருளாளனால் கொடுக்கப்படும். எல்லோரும் ''பாவோ நாந்யத்ர கச்சதி'' என்று திருவடிநிலையிலும், ''நல்வீடு பெறினும் கொள்ளுதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே'', ''இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன்'' என்ற ஆழ்வார்கள் படியிலும், ''வைகுண்ட-வாஸேபி ந மேபிலாஷ:'' என ஸ்ரீஸ்வாமி தேசிகன் படியிலும் நின்று ''இங்கே திரிந்தேற்கு இழுக்குற்றென்'' என வாயாரச் சொல்வர்.

புஷ்பவர்ஷம் வர்ஷிப்பர்கள். பக்தகோடிகள் அனைவரும் தலை மேல் கை குவித்து, ''ஜய விஜயீ பவ'' என்றும், ''வாழி அருளாளர், வாழி அணி அத்திகிரி, வாழி தூப்புல் அம்மான், வாழி எங்கள் குலத்தரசு'' என்று சொல்லி இப்படியாகப் பல்லாண்டு பாடுவர். திவ்யதம்பதிகளும் ஸ்ரீ தேசிகோத்தமனும் ஒருவரை ஒருவர் பிரிய மனம் இல்லாமல் தவிப்பர்.பிறகு தேசிகன் திவ்யதம்-பதிகளின் அழகை வாரிப்பருகிக்கொண்டு பின்புறமாகவே வெகு நிதானமாகத் தொண்டரடிப்பொடி வாசல் வரை ஏள்ளிக் கடைசியில் பிரிய மனமில்லாது நிற்பர்கள். இதுவரை அடியார்கள் குழாங்கள் இந்த அருமந்த சேர்த்தியை விட்டுப்பிரிந்து ஆசார்யோத்தமன் திரும்பினவுடன் அன்பர்க்கே அவதரிக்கும் ஆயன் நிற்க அருமறைகள் தமிழ்செய்தான் தாளே கொண்டு துன்பற்ற மதுரகவிபோல் எல்லோரும் திவ்யதம்பதிகள் நின்றுகொண்டிருக்கும்போதே ஸ்ரீதேசிகனைப் பின்பற்றுவர்கள். திவ்யதம்பதிகளும் உள்ளே ஏள்ளிவிடுவர்.

ஸ்ரீஸ்வாமி தேசிகன் பிறகு இரு வெண்குடைக் கீழ் ஆழ்வார் வீதி ஏள்ளுவர். அடியார்கள் எல்லாம் ஸ்தோத்ரபாடம் அநுஸந்திப்பர். நேராக ஸுதர்சனாழ்வான் ஸந்நிதிக்கு ஏள்ளி அவரை மங்களாசாஸனம் பண்ணிக்-கொண்டு திரும்பி நம்மாழ்வார் ஸந்நிதியில் புகுந்து ஆழ்வார், மதுரகவிகள், நாதமுனிகள் இவர்களை ஸ்தோத்ரம் செய்து அவர்களிடமிருந்து மாலை மர்யாதைகளைப்பெற்று நேராக ஸ்ரீபாஷ்யகாரர் ஸந்நிதிக்கு ஏள்ளுவர். முதலாவதாக அங்கு கோவில் கொண்டிருக்கும் இதர ஆழ்வார் ஆசார்யர்களை-யெல்லாம் மங்களாசாஸனம் செய்து மர்யாதை பெற்று, தமக்குப் பரமகுரு-வாயுள்ள பாஷ்யகாரரை அணுகி அடிபணிந்து நிற்பர். அப்போது ஸ்ரீபாஷ்ய-காரர் திருவடிகளில் தமக்குள்ள பரிபூர்ணமான பக்தியானது தோற்றும்படித் தாம் அருளிச்செய்த யதிராஜஸப்ததி என்கிறஸ்தோத்ரத்தையும் மற்றும் உள்ள பாசுரங்களையும் அனுஸந்திப்பர்கள். ''யத்யேதம் யதிஸார்வபௌமகதிதம் . .

. . கல்லோல கோலாஹல'' என்ற ச்லோகத்தை அநுஸந்திக்கும்போது ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீஸூக்திகளிலுள்ளகௌரவமானது வெளியாகும். பிறகு க்ரமமாக மர்யாதைகளை ஸ்ரீபாஷ்யகாரரிடமிருந்து பெற்றுத் திரும்பி நேராக வாஹந மண்டபத்திற்கு ஏள்ளி ஸ்ரீதாததேசிகனுக்கு மறுபடியும் மர்யாதைகள் ஸ்வாமியிடமிருந்து ஆகும். பிறகு திரும்பினவுடன் ஸ்தோத்ரபாட கோஷ்டி முடிவடையும்.

ஸ்ரீஸ்வாமிக்குக் கட்டியம் சொல்லுவோர் கட்டியம் சொல்லப் பெரிய-தொரு கற்பூர ஹாரத்தியானதும் ஸ்ரீஸ்வாமி உள்ளே ஏள்ளி நன்றாகப் புஷ்பங்களால்அலங்கரிக்கப்பெற்ற பல்லக்கில் ஏள்ளுவர். திருச்சின்னம் பரிமாறினவுடன் புறப்பாடு ஆகும்.இதற்குள் சாயங்காலம் ஏழுமணிக்கு ஆகிவிடும். நிறைய விளக்குகளும், தீவட்டிகளும், மத்தாப்புகளும் எரிய, ஸ்ரீஸ்வாமி அதி உன்னதமான திருப்பல்லக்கில் வெகு கம்பீரமாக அருளாள-னால் அனுக்ரஹிக்கப்பட்ட விலை உயர்ந்த தகடியானது இரு பார்ச்வங்களிலும் தொங்க, சிரஸ்ஸில் திருப்பரிவட்டத்துடன் வெகு அழகாகப் பின்னும் முன்னும் இருகோஷ்டிகளாலும் சூழப்பட்டு, முன்னே குடைகளின் வரிசைகளும் மேளவாத்யங்களும் செல்ல, அடியார்கள் குழாங்கள் புடை சூழ, ஸந்நிதிவீதி வழியாக நான்கு மாடவீதிகளும் ஏள்ளுவர். மாடவீதிகள் நன்கு அலங்க-ரிக்கப்பட்டிருக்கும்.இரு பக்கங்களிலும் க்ருஹங்கள் உள்ள ஆனைக்கட்டி வீதியில் ஸ்ரீஸ்வாமிக்கு அமோக வரவேற்பு உண்டாகும்.அப்படியே நேராகச் செட்டித்தெரு திரும்பியவுடன் இயல்கோஷ்டி முடிய, வேதபாராயண கோஷ்டி பின்தொடர, நேராகத் தூப்புலுக்கு ஒன்பது மணிக்கு ஏள்ளுவார். அடியார்கள் எல்லோரும் தூப்புல் வள்ளலை ஸந்நிதியில் அடிபணிந்து பல்லாண்டு பாடி இரு கை கூப்பி இந்த ஸேவை என்றும் தங்கள் மனதை விட்டு அகலாது இருக்குமாறு ப்ரார்த்திப்பதோடு தூப்புல் அம்மான் திருவடிகளைத் தஞ்சமாகப்-பற்றிய அடியார்கள் தங்கள் உள்ளத்தில் என்றும் திகழவேண்டும் என்றும் ப்ரார்த்தித்து நிற்பார்கள்.

**தொண்டர் உகக்கும் துணையடி வாழி நின் தூமுறுவல்**
**கொண்ட முகம் வாழி வாழி வியாக்கியா முத்திரைக்கை**
**வண் திருநாமமும் வாழி மணிவட முப்புரிநூல்**
**கொண்ட சீர்த்தூப்புல் குலமணியே வாழி நின் வடிவே.**

*ஸ்ரீ:*

*ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேஶிகாயநம:*



# ஸங்கல்பஸூர்யோதய உத்ஸவம்

*[ ஸ்ரீ.ஏ.ல.தி.கோ.பெரு.ஶடகோபதாதாசார்யர் ]*

தத்வஹித புருஷார்த்த ப்ரதிபாதகமாக ஸ்தோத்ரங்கள், காவ்ய நாடகங்கள் மற்றும் பல க்ரந்தங்களை ஸ்வாமி தேஶிகன் அனுக்ரஹித்துள்ளார். அவைக-ளில் தத்வடீகை, தத்வமுக்தாகலாபம், அதிகரணஸாராவளி, சததூஷணீ, ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம், த்ரமிடோபநிஷத்ஸாரம், த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளி, பாதுகா ஸஹஸ்ரம், ஹம்ஸஸந்தேசம்,ஸங்கல்பஸூர்யோதயம், யாதவாப்யுதயம் மற்றும் பல ஸ்தோத்ரங்களிலிருந்து ஶ்லோகங்களை ப்ரகரண அனுகுணமாகத் தொகுத்து ஸ்வாமி தேஶிகன் மங்களாஶாஸன காலத்தில் தொன்றுதொட்டு அனுஸந்தித்து வருகிறார்கள். இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ள ஸங்கல்பஸூர்யோதய ஶ்லோகங்களை நாம் அனுஸந்திக்கும் ஸமயத்தில் ஸ்ரீவரதராஜ பஞ்சாசத்தில் ஸர்க்க ஸ்திதி ப்ரளய நாடகத்தில் எம்பெருமான் விவித வேஷத்தை பரிக்ரஹிக்கிறார் என்று அனுபவித்தது போல ஸ்வாமியும் சைலூஷவத் விவித வேஷத்தை ஸ்வீகரித்து நடித்துக் காண்பிப்பதான ஸ்வாரஸ்யம் தோன்றும்.

இந்த ஸ்வாரஸ்யம் தோன்றவேண்டுமானால் இங்கு இடம் பெற்றுள்ள ஶ்லோகங்கள் ஸங்கல்பஸூர்யோதய நாடகத்தில் எந்த ப்ரகரணத்தில் உள்ளது என்றும், இங்கு எந்த ப்ரகரணத்தில் அனுஸந்திக்கப்படுகிறது என்றும் நாம் அறியவேண்டும். இதை நாம் இங்கு அனுபவிப்போமாக.

ஸங்கல்பஸூர்யோதய நாடகத்தில் பாத்ர அமைப்பே அதி விலக்ஷணம் ஆனது.ஸ்வாமி ஸாதிக்கும் க்ரந்தங்களில் எம்பெருமானின் தாவதாரத்தை மற்றும் ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம் முதலிய க்ஷேத்ரங்களையும் அங்கு ஸேவை ஸாதிக்கும் அர்ச்சாரூபியான எம்பெருமானையும் யதாகாலம் மங்களாஶாஸனம் செய்வது என்பது ஒரு விஷயமாகும். இந்த க்ரந்தத்தில் ஆறாவது அங்கத்தில் இந்த்ரியங்களை வசீகரித்த புருஷனுக்கு தாரண ஸ்திதி ஸாதனமான ஸ்தான விஷேத்தைத் தேடுவது என்ற வ்யாஜத்தில் தர்கன் என்ற ஸாரதியுடன் விவேகன் என்கிற ராஜா வருவதாக ஒரு காட்சி. அதில் இருவருமாக அயோத்யையை அடைகிறார்கள்.அங்கு விவேகன் சொல்லும் ஶ்லோகங்கள் ''விஷயிபிரஸௌ'' அஞ்சலிபந்தத்துடன் ''நமஸ்தஸ்மை

